தமிழ்க் கலைவாணர் வகை—1.



# படிக்காசுப்புலவர் சரிதம்



கோவை

சி. கு. நாராயணசாமி முதலியார்

எழுதியது



ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி,

மயிலாப்பூர், மதராஸ்

 [விலை அணா 2.

# முகவுரை



சேந்தமிழ்ச் செல்வர்காள் !

**பு**ண்ணியபூமியாமிவ்விந்து தேசத்தின்கண் பாரதமாதாவின் அருங்கண் மணிகளாகத்தோன்றிவிரிந்த சீர்த்திவகித்துத் திகழ்ந்த புலவர் சிரோமணிகளின் சிறந்த சரிதங்களை பூர்வ வரலாற்றுப்படி உண்மைக்குத்தாரமாக வறிந்து வகைகொள்வதற்கேதுவில்லாமலிருக்கின்றன. இக்குறைகளெல்லாமொருங்ககற்றி அப்புலவர்கள் காலம், இடம், தனம், கல்வி, தவம், சீலம் வாய்மை, அந்நியாயம் யவ்வ வமயங்களிற் பாடப்பட்ட அரியபாக்கள் முதலிய சிறப்பினைகளோடு கூடிய சிறந்த சரிதமொன்று, வெளிவரின், தமிழ்ச்சுவை நலங்கண்ட தமிழ்மக்களாவோர் அதனை ஆர்வத்தோடெழுந்தாதரிக்கப்பின்னிட மாட்டார்களென்பதெம் துணிபு.

புலவர்புராணம், விநோதரசமஞ்சரி, தனிப்பாடற்றிரட்டு பாவலர் சரித்திர தீபகம், முதலிய நூல்களில் இப்புலவர்கள் வரலாற்றுக் குறிப்புக்களில்லையோவெனின், உண்டென்றாலும், ஒழுங்கின்றி முன்னுக்குப்பின் முரண்பட்டுச் சரிதக் கோர்வைகள் சிதருண்டுகிடக்கின்றன. ஆனதால் அப்புலவர் பெருமக்களது அருமைச் சரிதங்களை வரிசையாக அகிலத்தோர் யாருங் கண்டானந்தங் கொள்ளுமாறு அநேகமாய் ஆராய்ந்தே அரும் பிரயாசைகொண்டு முதன்முறையாக "படிக்காசுப் புலவர்" சரிதத்தை வெளியிட முற்பட்டதாமென்க.

மற்றுமுள்ள, இரட்டையர், சிதம்பர சுவாமிகள், கம்பர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலிய புலவர்கள் சரிதங்களையும் கிரமமாக இதன்பின்னுக முறையே வெளியிடுவோமாக,

Coimbatore<br>15—8—13

சி. கு. நா.

சிவமயம்

# படிக்காசுப்புலவர் சரிதம்



## காப்பு

### நேரிசைவெண்பா

*சந்த முறும்படிக்கா சுப்புலவன் சற்சரிதை*
*சந்த முறவெழுதிச் சாற்றுதற்குத்—தந்திமுகன்*
*பூங்க மலப்பாதம் புகழ்சேர் துணையென்றே*
*ஆங்கமல நெஞ்சே யறி.*



தாயினு நல்ல தயாவுடை யோர்க டமதுடலம்
வீயினுஞ் செய்கை விடுவர்கொல் லோதங்கள் மெய்ம்முழுதுந்
தீயினும் வீழ்வர் முதுகினுஞ் சோறிட்டுச் சீறரவின்
வாயினுங் கையிடு வாரவர் காண்டொண்டை மண்டலமே.

எனப் புகழ்பெற்ற தொண்டைமண்டலத்திலே சற்றேறக்குறைய ௨00-வருடங்களுக்கு முன்னம் பொற்களத்தூரென வழங்கித் தற்காலம் தென்களத்தூரென வழங்கும் தலத்தின்கண்ணே நவவீரர் வழிவந்த செங்குந்தமரபினிலவதரித்துச் சிவானுக்கிரஹத்தால் தமிழ்க்கலை முழுதும்பயின்று தெய்வீகம் விளங்கிய நல்வாக்கினைப் பெற்று இல்லறவாழ்க்கையில் சிறந்துவிளங்கிய இவர், கி. பி. 1647-1672-ம் வருடங்களுக்கிடையே இராம

நாதபுரத்திலிருந்து அரசுபுரிந்த திருமலைசேதுபதி என மறுநாமம்பூண்ட இரகுநாதசேதுபதியின் சமஸ்தான வித்துவானாகவிருந்து சிலகாரணத்தினால் அங்கு நின்றும் நீங்கி வறுமைப்பிணியால் நலிவுற்ற இப்புலவர் அந்நாட்டிலுள்ள வல்லநகரத்தையடைந்து காளத்தி பூபதியென்பவரின்மேல் ஓர் செய்யுளியற்றித் தம் வறுமைப்பிணி தொலைப்பானெண்ணி அவர்சமுகம் சென்று,

பெற்றானொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றாதகஞ்சிகுடிக்குந்தரமல்லபாலிரக்கச்
சிற்றாளுமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றாதரவல்லையோவல்லைமாநகர்க்காளத்தியே.

என்னுஞ் செய்யுளைப் பிரசங்கித்து, அவரால் சில பாற்பசுவளிக்கப் பெற்றுப் பின்னர்,

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளைமற்றோர்
பழியாமற்பிள்ளையும்பாலென்றழாமற்பசியெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவைமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லைமாநகர்க்காளத்தியே.

என்னுஞ் செய்யுளால் அவரைப்புகழ்ந்து பாடினர். பின்னர் மாவண்டூரிலே மிக்கபிரபுவாயிருந்த கஸ்தூரி முதலியார் குமாரர் கறுப்பமுதலியாரென்னும் ஓர் வேளாளர் வேண்டுகோளின்படி "தொண்டைமண்டல சதகம்" என்னும் ஓர் பிரபந்தம்பாடி அரங்கேற்றி அவரால் வேண்டுந்திரவியங்கள் அளிக்கப்பெற்றனரேயன்றிப் பல்லக்குஞ் சுமக்கப்பெற்று அவ்வுவகைமேலீட்டினால்,

காவைவென்றிடுகெத்தூரிகண்மணிகறுப்பனென்னு
மாவையம்பதியான்றெண்டைமண்டலசதகங்கேட்டு
நாவலர்புகழ்ந்துமெச்சநவநிதிபொழிந்துநன்றாய்ப்
பூவுலகெங்கும்போற்றப்புகழ்நிலைநிறுத்தினானே.

எனவும்,

ஓர்கறுப்புமில்லாததொண்டைவள நன்னாட்டிலுசிதவேளைச், சீர்கறுப்பொன்றில்லாதகத்தூரி மன்னனருள்சேயைப் பார்மே, லார்கறுப்பனென்றசொல்லியழைத்தாலுநாமவனை யன்பினாலே, பேர்கறுப்பனிறஞ்சிவப்பன்கீர்த்தியினால்வெளுப்பனெனப்பேசுவோமே.

எனவும்,

எல்லப்பனம்மையப்பன்றரு திருவேங்கட நாதனெழிற்சிராமன், வல்லக்கொண்டையன் மாதைவேங்க டேசுரன் போலவரிசைசெய்தே, செல்வத்தம்பியருடனேகத்தூரிமகன் கறுப்பன்றெருவீதிக்கே, பல்லக்குத்தான் சுமந்தானதுநமக் கோராயிரம்பொன்பரிசுதானே.

எனவும் வழங்குஞ் செய்யுண்முதலியவற்றால் புகழ்ந்து மகிழ்ந்திருக்குங்கால், புலவர் சிவதரிசனஞ்செய்வா னெண்ணி பலசிவஸ்தலங்களையுந் தரிசித்து வணங்கிக் கொண்டு சிதம்பரமடைந்து கனகசபை சென்று சபா நாதரையும் சிவகாமியம்மையையும் தரிசித்து,

"பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம்வருமோநடுராத்திரியிற்
சல்லாப்புடவைகுளிர்தாங்குமோநடுச்சந்தைதனிற்
செல்லாப்பணம்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே."

எனவும்,

"வேல்கொடுத்தாய் திருச்செந்தூரர்க் கம்மியின்மீது வைக்கக், கால்கொடுத்தாய்நின் மணவாளனுக்குக் கவுணியர்க் குப், பால்கொடுத்தாய் மதவேளுக்கு மூவர் பயப்படச்செங், கோல்கொடுத்தாயன்னையேயெனக்கே துங்கொடுத்திலையே."

எனப்பாடித் துதித்தவளவில், பாட்டுக்குவந்தருளும் பரமேட்டி தொண்டரின் அன்பின்திறத்திற்குவந்து பஞ்சாக்ஷரப்படிமீது ஐந்து பொற்காசு வைத்தருளி னர். புலவர் போற்றிப்பணிந்து அருட்செயலை நினைந் தேத்திஆனந்தங்தொண்டனர். அதுமுதலாகவே "படிக் காசுப்புலவ" ரென்று யாவரும் புகழ்ந்துபோற்றத் திக ழ்ந்துநின்றனர்.

பின்னர் அத்தலத்தினின்றும் கடிதில்நீங்கித் தெ ன்னுட்டையடைந்து மீண்டும் இரகுநாதசேதுபதியைக் கண்டு,

மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடெட்டுக்
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன்கொடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்த்ரதாருவொத்தாய்ரகுநாதசெயதுங்கனே.

என்னுஞ் செய்யுளைப்பாடிச் சில பரிசுபெற்று பல்லக்கு முதலிய விருதுகளுடன் சிவகங்கையை யடைந்தபொ ழுது அதனரசர் பந்துவான "திருமலைத்தேவர்" இவ ரது ஆரவாரத்தைநோக்கி அழுக்காறுகொண்டு தமது பரிசனர்களைவிடுத்துப் புலவரையழைத்துத் தமதரண் மனையின் கண்ணுள்ள "கிளிக்கூட்டுச்சிறையிலே" யடைத்துவைக்கப் புலவர் சினந்துவருந்தினரெனினும்,

" ஊழிற்பெருவலியாவுளமற்றென்று
சூழினுந்தான்முந்துறும்."

என்பதைச் சிந்தித்துத்தெளிந்து,

நாட்டிற்சிறந்ததிருமலையாதுங்காகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்னுமோர்பைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயிரைதாவென்றுகூப்பிடவே.

என்னுஞ் செய்யுளைப்பாடி அவரைவசப்படுத்திப் பரிசு பெற்று அதினின்று நீங்கிக் காயற்பட்டணத்தையடைந்து சீதக்காதியென்னும் ஓர் பிரபுவைக்கண்டு,

நேசித்துவந்தகவிராசர்தங்கட்குநித்தநித்தம்
பூசிக்குமின்கைப்பொருளொன்றுமேமற்றப்புல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்துநடப்பார்க்கும்வேசிக்குவேலைசெயும்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே.

என அவர் பெருமையை வியந்தும்,

ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்கும்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே.

எனவும்,

ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துப்பலனென்னகைவிரித்துப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியாய்
ஓயாமலீபவன்வேள்சீதக்காதியொருவனுமே.

எனவும் அவர் ஈகையைச்சிறப்பித்தும்,

தடக்கும்பஙிம்புரிக்கொம்பாசலபதத்தந்திபட
நடக்குந்தரங்கத்துரைசீதக்காதிநன்னாட்டிலுள்ள
வடக்குங்குமக்கொங்கைப்பெண்ணெனன்பவள்தெருவாசலிலே
கிடக்குங்கவியும்பாராசரத்தினகிரீடமுமே.

என அவர் நாட்டைவியந்தும்,

தரைகண்டமட்டும்படர்ந்தண்டகோளமுந்தாவியெங்கும்
உரைகண்டகீர்த்திபெறுஞ்சீதக்காதியுலகினில்வெண்
டிரைகண்டெழுங்கடன்மீதேதன்வங்கத்தைச்செல்லவிட்டுக்
கரைகண்டவனிநங்காணுனென்னுசைக்கடற்கரையே.

மைப்போதகமும்வளநாடுஞ்செந்தமிழவாணர்க்கருள்
கைப்போதகமனையான்சீதக்காதியைக்காத்திருந்த
வப்போதறிந்திலமிப்பாழ்ம்பணத்தினருமையெல்லா
மிப்போதறிந்தனமீயாதபுல்லரிடத்திருந்தே.

காய்ந்துசிவந்ததுசூரியகாந்திகலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்டொலைவில்பன்னூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே.

என அவன் பெருவண்மையைப் புகழ்ந்தும், அப்பிரபு சமுகத்திலேயே புலவர் திலகமாய்விளங்கி அவரால் நன்குமதிப்புப்பெற வாழ்ந்துவந்தனர்.

இங்ஙனம் புலவர்குழாங்கட்குக் கற்பகத்தருவென விருந்த பிரபுகுல சிகாமணியாகிய சீதக்காதிவள்ளல் திடீரென மண்ணுலகநீத்து விண்ணுலகேகினர். இதனை யுணர்ந்த புலவர் பிரபு உயிர்நீத்தமைக்கு ஆற்ருது மிக வருந்தி,

விண்ணுக்குமண்ணுக்கும்பேராய்விளங்குதேவேந்த்ரனென்
கண்ணுக்கினியதுரைச்சீதக்காதிகமலநிகர் [னுந்
தண்ணுக்கிசைந்தவதனசந்த்ரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியவே.

எனவும்,

பூமாதிருந்தென்புவிமாதிருந்தென்னபூதலத்தில்
நாமாதிருந்தென்னநாமிருந்தென்னநன்னுவலர்க்குக்
கோமானழகமர்மால்சீதக்காதிகொடைமிகுந்த
சீமானிறந்திட்டபோதேபுலமையுஞ்செத்ததுவே.

எனவும்,

நற்றாய் சோதிடரை நிந்தித்ததாக வமைத்துக்கூறியது.

மாகத்தத்தும்புகழான்பகைவேந்தர்மகுடம்பொடி
யாகத்தத்தும்பரியான்சீதக்காதியணிமலரி
லேகத்தத்தும்பியிசைபாடுமார்பினிலென்மகட்கோர்
மோகத்தத்துண்டென்றுசொன்னீரிலைமுன்மொழிந்தவரே.

எனவும்,

தேட்டாளன்காயற்றுரைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்கம்பநாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே.

எனவும்,

மறந்தாகிலுமரைக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங்காயற்றுரைசீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே.

எனவும் இக்கவிகள்கூறி இரங்கினர்.

பின்னாங்கு நின்று நீங்கித் திருச்செந்தூரடைந்து முருகக்கடவுளைத் தரிசித்து,

முன்னநின்னன்னை முலையூட்டிமையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியகாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றனோசெந்தூரிலிருப்பவனே.

மூற்கரையப்பரையேறவிட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித்திடுங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியையெங்கெங்குந்தித்திக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரெனுந்தானத்திலே.

சின்னஞ்சிறுபிள்ளைசெங்கோட்டுப்பிள்ளைசிவந்தபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளைபூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சழசல்கின்றசூரனைக்கொன்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளைசெந்திற்குறத்திக்குமாப்பிள்ளையே.

கல்லடிக்குமுளியிரண்டுகாதடிக்கு ளடிப்பதென்னக்கவி தைகேட்டுப், பல்லடிக்கக்கிடுகிடெனப்பறையடிக்குநெஞ்சர் தமைப்பாடுவேனோ, வில்லடிக்கும்பிரம்படிக்குங்கல்லடிக்கும் விரும்பிநின்றமெய்யனீன்ற, செல்லடிக்குந்தடவரையிற்சேற டிக்கவலையடிக்குஞ்செந்திலானே.

என்பது முதலிய செய்யுட்களாற்றுதித்து மற்றும் சிவ தலங்களைத் தரிசித்துவணங்கித் தண்டலை நீணெறி யெனுந் தலத்தையடைந்து அங்குள்ள அன்பர்கள் வேண்டுகோளின்படி "தண்டலையார்சதக" மென்னும் ஓர் சதகத்தை யருளிச்செய்து அச்சந்நிதியிலரங்கேற் றிப் பல பரிசும்பெற்றுச் சில நாளங்கு வசித்திருந்த னர். இதனிடையில் இப்புலவர் சிரோமணிக்கும், குடந் தையம்பதியில் கம்மியர்மரபினிற்றோன்றிய கும்பனேன்

னுமோர் புலவர்சிகாமணிக்கும் கல்வி விஷயமாகப் பல சமயங்களில் சம்வாதங்கள் நிகழ்ந்துவந்திருப்பதாக அறியக்கிடக்கின்றன. இவ்வழக்கு நமது நாட்டுக்கவிஞர்களெல்லாரிடத்துமே அமைந்திருப்பதைக் காணலாம். இது யிவர்களுக்கியற்கைபோலும். நிற்க,

இனி இப்புலவர்க்கும், கும்பனென்னும் புலவர்க்கும் அவ்வாறு நடந்த ஒரு சம்வாதத்தை இதன்கீழ்க் கூறுவோம்.

ஒருகாலத்தில் கும்பனென்னுங்கவி "மழவரங்கன் என்னும் ஒருபிரபுவுக்கு எழுதிய சீட்டுக்கவியில், படிக்காசுப்புலவரை,

கொஞ்சுகவியானையைவசைக்கவியெயிற்றினாற்
குகவியுயிரான்மருட்டும்
குடிலகவிராஜசிங்கங்களைப்பங்கம்செய்
கும்பசரபத்தினோலை
செஞ்சிவிஜயாபுரிக்கோட்டைக்கபாடம்
திறக்குங்களிற்றுவேந்தன்
திறல்கொண்டலட்சுமணரங்கமழவேந்தரதுவர
ஜெயசௌர்யனினிதுகாண்க
வஞ்சியர்களிதயமும்கொஞ்சுபுரவியின்மனமும்
வல்லகவிராஜர்மனமும்
மகிமைபெறுமூர்த்திக்குமறிவரிது நின்சமுகம்
வருமுனேயறிசதுரநீ
பஞ்சகலிகாலப்பயங்கரன்றொண்டைமான்
பதியிலவமானமாக்கிப்
பஞ்சலட்சணமெனுங்கசைகொண்டடித்துப்
படிக்கனைமுடுக்கினோமே.

என வசைகூறி விடுத்ததைத்தெரிந்த படிக்காசர், ஷை சமஸ்தானத்திற்குத் தாம்வரைந்த சீட்டுக்கவியில்,

கொல்லத்தமிழ்க்கவிசெலுத்திவாய்வீண்பெற்ற
 கும்பனெனுமொருதந்தியைக்
கொத்தியுண்டுமிழண்டபேரண்டமென்னவரு
 கூர்படிக்காசனேலே
வல்லச்சிவந்தெழும்பல்லவன்றன்கருணை
 மாரிபோலேவழங்கும்
வாழ்வைக்கெடுக்கவருதென்குடந்தைப்பதிக்
 கொள்ளிவாய்ப்பேய்களல்ல
புல்லத்துரைத்தனரெனும்பனியிடையிலே
 புகுபரிதிநிகரென்னவே
புகழ்கொண்டலட்சுமணரங்கமழுவேந்த்ரதுரை
 பூபனெதிர்கொண்டுகாண்க
 * * * * * *
 * * * * * *
என்பேரிலபசாரமுண்டுனைத்துதிசெய்ய
 எனைவரவழைத்திடுவையே. *

என நிந்தித்தனர்.

இங்ஙனமாக இவ்விருபுலவர்களும் தாங்கள் பரிசு பெற விரும்பிச்செல்லும் சம்ஸ்தானங்கள்தோறும் விவகாரம் செய்துகொண்டே வருகிறகாலத்தில், கும்பன் இராமநாதபுரத்திலரசுபுரிந்த பெருங்கொடை வள்ளலாகிய ரகுநாதசேதுபதியைக்கண்டு தமது கல்வித்திறனைக்காட்டிப் பல்லக்குமுதலிய சம்மானம்பெற்றுத் திரும்புஞ் சமயத்துப் படிக்காசுப்புலவர் அச்சமஸ்தானத்திற்குவா இப்புலவரையும் மன்னர்பிரான் உப

சரித்து வரவழைத்துக் கும்பனென்பவரின் கவிவன் மையைக்கூற அதுகேட்டுப் பொருதபடிக்காசுப்புலவர்.

ஏதையறிவானிவனுக்கேன்பல்லக்குச்
சேதுரகுநாதசிங்கமே—ஓதுகின்ற
*கச்சைக்கும்பச்சுரைக்காய்கறிக்காமோவதுபோல்
தச்சக்கும்பன்சொல்.

என ஓர் வெண்பாவிலிழித்துக் கூறினரென்ப.

இங்ஙனமாக இவ்விரு புலவர்களுள்ளு மேற்பட்டிருக்கும் விவாதத்தை யுணர்ந்த சேதுபதிப்பிரபு மிக வருந்தினரெனினும், புலவர்களிவ்வாறு வழக்கிட்டு நிற்பது எவ்வாற்றானுமொவ்வாததாகவிருப்பதால்இதற்கென்செய்வதெனப் பலவாறுசிந்தித்து முடிவில் இவர்களுட் கொண்டிருக்கும் விரோதத்தையொழித்து நேசப்பான்மை கொள்ளற்கேதுவாம் சாதனங்களைச் செய்தலே சிறப்புடையதும் அறநெறி முறமைக்கோர் அறிகுறியாயுமிருக்குமெனத் தீர்மானித்து அவ்விருபுலவர்களையும் நேரில் வரவழைத்துச், செந்தமிழ்ப்பனுவலைச் சீருடனேதிய சிறப்புடைப்புலவீர்! நும்மாட்டு நாமறிவிக்கவிருக்கும் ஓர் விஷயத்தினைச்செவியேற்று அதன்படியே நடக்கத்தவறமாட்டீர்களென்றும் நம்புகிறேன். உலகில், ' கூடிக்கெட்டாருமில்லைப் பிரிந்து வாழ்ந்தாருமில்லை." என்னும் பழமொழி நீங்களறியாததல்லவே. அங்ஙனமிருக்க நீங்கள் உங்களில் நீங்

* இப்பாட்டுகள் சிதைந்துள்ளன.

காதபகையைக் கொண்டிருப்பதாக வறிகிறேன். இச் செயல் உங்கள் பெருமைக் கொருவாற்ரு லு மேற் றதல்ல: ஆகையால் நீங்களிருவரும் இன்று முதல் உங்களில் வைத்திருக்கும் த்வேஷத்தை முற்றிலு மொழித்து இனிப் பகையென்பதைக் கனவிலுங் கருதாது ஒத்த அன்பினர்களாய் ஒருயிர் இரண் டுடலெனக் கலந்துறவாடும் பெற்றியைக் கைக்கொள் வீர்களாகவும்" என அரசன் கூறலும், புலவர்கள் வேந்தன் உரையைமாற்ற வகையின்றி அங்ஙனமே உடன்பட்டிருப்பதாக உரைத்தலும் பாவலன் மிக்க வானந்தங்கொண்டு புலவர்களை நோக்கி நீங்களென் னுரையைத்தழுவி நேசப்பான்மைகொண்டதி னடை யாளமாக ஒருவர்மேலொருவர் புகழ்ச்சியாகப் பாடுவீ ரேல் அவைதாம் நீங்கள் ஒற்றுமையைக் கைக்கொண் டிருப்பதை விளக்கக்கூடியவை என மொழிதலும், புல வர்களிசைந்து பாடிய கவிகள்,

படிக்காசுப்புலவர், கும்பனேன்னும் புலவர்மேற் சோல்லிய கவி.

"யமகம்"

கும்பாகனகசபாபதியீன்றகுளிர்ந்திரசிக்
கும்பாவலர்சிரோரத்தினமேதமிழ்க்கோப்பசுவின்
கும்பாதபாலுடன்றேனையுங்கூட்டிக்குழைத்துச்செம்பொற்
கும்பாவிலேயெடுத்துக்குடித்தாலந்தக்கூறெருக்குமே.

என்று கூற,

கும்பனேன்னும்கவி படிக்காசுப்புலவர்மேற் கூறியகவி.

மட்டாருந்தென்களந்தைப்படிக்காசனுரைத்ததமிழ்
வரைந்தவேட்டைப்
பட்டாலேசூழ்ந்தாலும்மூவுலகும்பரிமளிக்கும்
பரிந்தவேட்டைத்
தொட்டாலுங்கைமணக்குஞ்சொன்னாலும்வாய்மணக்குந்
துய்யசேற்றில்
நட்டாலுந்தமிழ்ப்பயிராய்விளைந்திடுமே
பாட்டினதுநளினந்தானே.

என்று கூறி இப்புலவர் சிகாமணிகளிருவரும் ஆயுள் பரியந்தம் ஒற்றுமையாகவே இருந்தார்களெனத் தெரி கிறது. பின்னொருகாலத்தில் இப்புலவர் அறியலூர் சென்றிருந்தசமயம் இவரை அபிமானத்திருந்தபிரபு காலவித்தியாசத்தால் இவருக்கு வருஷாந்தரமாகக்கொ டுக்கவேண்டிய ஆயிரம் பொன்னைக்கொடாது ஐந்நூறு பொன்கொடுக்க அப்பொழுது புலவர்பிரபுவுக்குக்கூறிய கவி,

கனத்தசிராப்பளிதனிலேவடுகர்கூத்துக்
கட்டியாளுவதாச்சுத்தஞ்சாவூரோ
முனைத்தமராடியகாடமிஞ்சிப்போச்சு
முனையும்போம்மூக்கும்போம்மைசூர்போச்சு
பினற்றுறையூர்காய்ச்சலாம்வடதேசத்துப்
பேய்த்துலுக்கருடையாரோகவிதைகேளார்
இனித்தமிழுக்கறியலூறென்றிருந்தோ
மிங்குஞ்சம்பளங்குறைந்தாலென்செய்வோமே.

இக்கவியைக்கேட்டுப் பிரபு தக்க சம்மானஞ்செய்தனுப் பினாராம்.

மற்றொருக்கால் ஷடி பிரபு இப்புலவரை நோக்கி ஐயா! பள்ளியர்களை உலகத்தில் தாழ்வாகக் கூறுகின்றார்களே? அஃது அப்படித்தானா? என்று கேட்கப் புலவர்,

தெள்ளியபாலும்பள்ளிசெந்தமிழ்ப்பதியும்பள்ளி
ஒள்ளியமடவாரெல்லாமுண்ணவேசமைக்கும்பள்ளி
வெள்ளியிலிருந்தபெம்மான்விளங்கிழையோடும்பள்ளி
பள்ளியென்றுரைத்தவார்த்தைபகரநற்சிலையதாமே.

என்று கூறினாரென்ப.

"சந்தம்படிக்காசலாதோருவர்பகரோணுதே"

என்ற புகழ்ச்சியை விளக்கும்பொருட்டு மற்றொரு சமயம் இப்புலவர் கொங்குநாட்டிற் சஞ்சாரஞ்செய்து வருகையில் அக்காலத்திலநேகவித்துவான்கள் கொங்கு நாட்டில் பிரபலமாயிருந்ததால், தம்முடைய சந்தக்கவிகளையாரும் மதியாமையைக்கண்டு புலவர் கூறியகவி,

அஞ்சாலிமக்களுஞ்சாணாரும்பாணரும்அம்பட்டரும்
செஞ்சாயக்காரரும்வேசையர்மக்களுஞ்செந்தமிழைப்
நஞ்சாகப்பன்னியொருகாசுக்கோர்வண்ணம்பாடலுற்றார்
பஞ்சாகப்போச்சுதையோ வென்றமிழ்க்கொங்குநாடெங்குமே.

என ஒரு செய்யுட் காணப்படுகிறது.

வெண்பாவிற்புகழேந்திபரணிக்கோர்செயங்கொண்டான்
விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன்கோவையுலாவந்தாதிக்
கொட்டக்கூத்தன்

கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள்வசைபாடக்
காளமேகம்
**பண்பாயபகர்சந்தம்படிக்காசலாதொருவற்
பகரொணுதே.**

என ஒரு செய்யுளும் வழங்கி வருகின்றது.

தூளிபடவேவந்தகவிவாணர்கவியெலாஞ்
சூறையிடுகவிரக்ஷகன்
துஷ்டநிஷ்டூரகவிசுப்ரதிபக்கவித்துறைக்கெலாந்
தள்ளுசேட்டு
வாளைகுதிபாய்கின்றவாங்கைகுடிமேவிய
மகாசனத்தலைவருக்கு
மட்டுலவுசோலைக்களங்கைப்படிக்காசு
வரவிட்டவிஞ்ஞாபனம்
காளமேகம்போலவசைபாடயாமுமிக்
காசினியிலவதரித்தோம்
காளாக்கர்தோழன்மேற்கவிதையுமேலுமுள
கவிதையுமறிந்ததிலையா
ஆளனுமிருக்கவேசெய்தகருமங்களுக்
கழிவுதேடுதலாகுமோ
ஆகாதகாரியம்போகாதுவீணிலே
யபகீர்த்திநிலைநிற்குமே,

என்னுங்கருத்தமைந்த சீட்டுக்கவியொன்றும் இப்புல வர் வாங்கைக்குடிமகாஜனத்தலைவருக்கெழுதி யிருப்ப தாகக் காணப்படுகிறது.

**விருதகவிராசன்கவிச்சக்கரவர்த்திவாய்
வீண்பேசுவார்கள்மிண்டன்
விஞ்சையர்கள்தம்பிரான்களங்கைப்படிக்காசு
விவரமுடனெழுதமோலை**

பொருவில்பிரபந்தமதிலிலகுகவிசேகரன்
புகழ்செய்தளவாய்குமாரன்
பூசக்கரமன்னர்பணிரகுநாதசேதுபதி
பூரித்தெழுந்துகாண்க
பரிதிமதியுள்ளளவுமிற்கும்பிரபந்தகவி
பாடிநின்கீர்த்திகேட்டு
பஞ்சலக்ஷணமொடுதமிழ்க்காணிக்கையுங்கொண்டு
பரிவாகவுனைநாடியே
இருபதின்காதவழிகடலேறிவந்தன
னிருந்தமிழ்சொள்ளவேண்டி
யிருகாதவழியளவு * * * *
* * * * * *

என இராமநாதபுரம் இரகுநாதசேதுபதி வேந்தர்க்கு இப்புலவரெழுதிய மற்றொரு சீட்டுக்கவியும் காணப் படுகிறது.

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துதூதுசென்றுபிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துகிவிருக்கின்றேமே.

என ஓர் கவியும் வழங்கா நின்றது.

இங்ஙனம் சின்னாட் சென்றபின் தருமபுராவாதீனத் தில் அப்பொழுது விளங்கிய ஞானசிரியருவக்குமாறு சிலகால மனுக்கத்தொண்டாாயமர்ந்து பின்னர், அவ் வாசிரியர் ஆக்கினைப்படி வைத்தீசுரர் சந்நிதியடைந்து

அக்கடவுளின் கட்டளையை நடாத்திக்கொண்டு "படிக் காசுத்தம்பிரா"னென அதிகப் பிரபலமாய் வாழும் நாளில், அத்தலத்தைச்சுட்டி "வேளூர்க்கலம்பகம்' என்னும் ஓர்பிரபந்தமியற்றி அச்சந்நிதியில்அரங்கேற்றி வாசித்தனர். அதன்பின்பு, முன்னர்த் தமக்குப் படிக் காசுதந்து திருவருள்பாலித்த சிற்சபாநாயகர் சந்நிதி யிலே தொண்டுசெய்து கதியடைய வேண்டுமென்னும் அவா மேலீட்டால் ஞானசாரியாநுமதிபெற்றுச் சிதம் பரத்தைச்சேர்ந்து ஒரு திருமடம் வகுத்து அதிலிரு ந்துகொண்டு அக்கடவுளுடைய தொண்டை வகித் துத் தினந்தோறும் ஆலயத்தையடைந்து சபாநாயக ரைத் தரிசிக்கும்பொழுது அக்கடவுள் பஞ்சாக்ஷரப்படி யில் பொற்காசு ஐந்துவைத்தருளப்பெற்று சைவாசாரி யாராகச் சிலகாலம் நன்மாணாக்கர்களுக்கு ஞானோபதே சம் பாலித்து வீற்றிருந்து சிலபிரபந்தங்களையும் அரு ளிச்செய்து அக்கடவுளுடைய திருவடி நீழலையடைந் தன ரென்ப.

இவ்வளவே படிக்காசுப்புலவர் வரலாறுகத்தெரிந் தவை. இச்சரிதங்களால் படிக்காசுப்புலவர் தெய்வப் புலமை வாய்ந்த பெரியாரிலொருவரென்பதும், சிவ பிரானருள் சிறக்கப்பெற்றவரென்பதும், கலைமகளார் கருணாகடாக்ஷம் கைவரப்பெற்ற திவ்யப்புலவரென்ப தும் துறவறமடைந்து ஞானசமாதிகூடி ஏகாந்தத்தி னினிமையுணர்ந்த ஞானசம்பன்னரென்பதும், சந்தம்

பாடுவதில் நிகரற்ற திறமைவகித்த சாஸகவியென்ப தும், கடவுளினிணையடிகளில் இடையறாத பக்தி செலுத்தி அவன் இன்னருள் பெறுதலே சிறந்தபே றெனக் கருதுமியல்புடையவ ரென்பதும், சபாநாயகர் இவர் பாடுந்தோறும் இவர் பாடலுக்குவந்து பரிசாகப் பஞ்சாக்ஷரப்படிமிசை பொற்காசு வைத்தருளப்பெற்ற மகானென்பதும், மற்றும் இவரது உத்தமகுணவிசே டங்களும் நன்குவிளங்கும். இவர்க்கு வழங்கிய "படிக் காசுத்தம்பிரான்" "படிக்காசுப்புலவர்" என்பது இவ ரது பாடலுக்குப் பரமன் மகிழ்ந்து பொற்காசளிக்கப் பெற்ற விசேடத்தாலெழுந்த காரணப்பெயராகும். இப் புலவர் பெருமானைப்படைத்த நந்தமிழகத்தின் பெரு மையை யென்னென்றியம்புவது.

இனி, இப்புலவர் பெருமான் பாடியனவாக மேலே குறித்த பாடல்களில், "எல்லப்பனம்மையப்ப" "ஓர் கறுப்புமில்லாத" "காவைவென்றிடு" என்பவற்றைச் சோக்கநாதப்புலவர் பாடியதாக வழங்கியும், "மட்டா ருந்தேன்களந்தை" என்று படிக்காசுப்புலவரைப் புகழ்ந்த கும்பனேன்னும் புலவன் வாக்கைப் பலபட்ட டைச்சோக்கநாதப்புலவர் பாடியதாக மாற்றியும் காணப் படுகின்றன. இச்சரிதங்களில் பாடபேதங்களும் மாறு பாடுகளும் பலவுள. இவை முன்பதிப்பித்தோர் ஆராய்ச்சிபுரியாமல் அவசரப்பட்டுச்செய்த பெரும்பிழை போலும்.

இனிப் படிக்காசுப்புலவர் காலமின்னதென்பதை ஆராய்வோம். "பெற்றளொருபிள்ளை" "வழிமேல் விழிவைத்து" என்ற பாடல்களின் கடைசி அடிகளில் "வல்லமாநகர்க்காளத்தியே" என்ற ஓர் பிரபுவினைக் குறித்தும், "மால்சீதக்காதியிருகரமே" "மைப்போ தகமனையானசீதக்காதி" "உரைகாண்டசீர்த்திபெறுஞ் சீதக்காதி" என்ற ஓர் வள்ளலை வியந்தேத்தியும், "ஏதை யறிவான் இவனுக்கேன் பல்லக்குச்சேது ரகுநாதசிங் கமே" "புகழ்தளவாய் குமாரன்" "பூச்சக்கரமன்னர் பணிரகுநாதசேதுபதி" என்று இராமநாதபுரமன்னனைப் புகழ்ந்தும், இப்புலவர் பாடியிருப்பதால் இவர் இற் றைக்கு இருநூற்றுநாற்பது வருடங்கட்கு முற்பட்டவ ரென்பர். இப்புலவர்சிகாமணி தஞ்சைஜில்லா நாகப் பட்டணத்திற்கடுத்த திவ்யக்ஷேத்திரமாகிய கமலாலய மென்ற திருவாரூரின்கண் வதிந்த வன்மீகநாததேசிகர் குமாரர் வைத்தியநாத நாவலரிடம் கல்விகற்றரென் பதை,

"கூடுஞ்சபையிற்கவிவாரணங்களைக்கோளரிபோற்
சாடுஞ்சதாசிவசற்குருவேமுன்னுன்றந்தைதம்மாற்
பாடும்புலவர்களானேமின்றிச்செம்மறப்பட்டியெங்குங்
காடுஞ்செடியுமென்னேதமிழ்க்காரிகைகற்றதுவே."

என்று படிக்காசுப் புலவரே பாடிய செய்யுளைக்கொள்க.

தாம்பாடிய தொண்டைமண்டலசதகத்தில் "கேட் டாலுமின்பங் கிடைக்குங்கண்டீர் கொண்டகீர்த்தி யொடு, பாட்டாலுயர்ந்த புகழேந்தி" என்ற பாடலில்

புகழேந்திப்புலவரைக் குறிப்பதால் இவர் புகழேந்திப் புலவர்க்குச் சில நூற்றூண்டுகளுக்குப் பிற்பட்டவரென் பதுறுதி. இவர் பாடலிற்றுதித்த "சீதக்காதிவள்ளலை யும்" "காளத்திப்பிரபுவையும்," பற்றிய விவரமொன் றும் நமக்குப் புலப்படவில்லை. இப்புலவரெழுதிய சீட் டுக்கவியிற்கண்ட ரகுநாதசேதுபதி யென்பது சேதுபதி கள் பலர்புனைந்த பெயராயினும் கி-பி. 1647-முதல் 1672-வரை மிக்கத்திறமையுடன் ஆட்சி செய்தவரும் புலவர்க்குப் பெருநிதியாய் விளங்கியவரும், பல பெரிய தர்மங்களைச் செய்தவருமாகிய திருமலைச்சேதுபதியாம் ரகுநாதசேதுபதியைக் குறிக்கின்றதாகவே தோற்று கிறது. இந்தத் திருமலைச்சேதுபதி பேரிற்றூன், பொன் னுங்கால் அமிர்தகவிராயர் ஒரு துறைக்கோவைபாடிப் பரிசுபெற்றது. இக்கோவையில், சேதுபதியைத் தள வாய்புத்திரர் என்றும், தளசிங்கமென்றும் "இராமேசர் பதம்பணியுமையான்" என்றும் கூறப்படுதல் அச்சேது பதியின் வரலாறுதல் கண்டுகொள்க.

இக்காரணங்களால் இப்புலவர் பெருமான் இற் றைக்கு 240-வருடங்களுக்கு முன் விளங்கியவரென்றே கொள்ளலாம்.

மற்றுமிவர் ஜெனனமாதிய விசேடங்களொன்றும் கிடைக்கவில்லை. வேளூர்க்கலம்பகமும், தண்டலையார் சதகமும், தொண்டைமண்டலசதகமும், தவிர வேறு அரிய சந்தப்பாக்களொன்றும் அகப்படுவது அருமையா

யிருக்கின்றது. இப்பிரதியும் மிகப்பிரயத்தினத்துடன் கிடைத்ததைக்கொண்டு முயன்று பரிசோதிக்கப் பட்டது.

இப்புலவர் செங்குந்தமரபினரேன்பதை,

புகழ்பூத்திடுந்தில்லைமேலோனையம்மையைப்போற்றியெங்கு
மகிழ்பூத்திடாதபொற்காசைப்பஞ்சாக்கரத்தின்படிமே
னிகழ்பூத்தல்பெற்றுப்புள்வேளூர்க்கலம்பகஞீட்டியரூத்
திகழ்பூத்துநின்றசெயலோர்செங்குந்தசிலாக்கியரே.

எனவரும் பிரமாண முகத்தானு முணர்க. வேறிரண்டு பாடல்களும் இவர் பாடியனவாகக்கண்டவை வருமாறு:—

கன்மாரிகாத்தமுகில்கஸ்தூரியருள் மாவைக்கருப்பனென்னும், வின்மாரிதனதுகிளையத்தனையுஞ்சபைகூட்டிவியந்து கேட்டுச்-, சொன்மாரிபொழிந்திடவேசிரக்கம்பஞ்செய்ததொடுசுருளுந்தந்து, பொன்மாரிபொழிந்துதந்தப்பல்லக்குஞ்சுமந்த தனுற்புகழ்பெற்றானே.

கூடுந்திரைகொண்டிவன்வேளைபார்த்துக்குறுகலர்கள்
தேடுந்தென்மாவைக்கறுப்பனெங்கோனெஞ்சிவிகைதனைப்
பாடுந்தமிழ்ப்பெருமானொட்டக்கூத்தன்பதாம்பயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனைப்போலச்சுமந்தனனே.

முற்றிற்று.

# ஸ்ரீ ராமாயண வினுவிடை 5-ம் பதிப்பு

ம-ா-ா-ஸ்ரீ, ஆ. ஸி. கஸ்தூரிரங்கய்யர்,
பீ. ஏ., எல். டி., அவர்கள் இயற்றியது

இதில் ராமாயணக் கதையின் ஏழுகாண்ட ஸாரமும் ஸந்தேகமுண்டாகக்கூடிய நிலைமைகளுள்ளவிடத்து ஆக்ஷேப ஸமாதானங்களுடன் தீர்ந்த விசாரமும், நீதிகள் போதிக்கக் கூடியவிடத்துப்படிப்பினைகளும்காட்டி இயற்றப்பட்டதோர் இனிய நூல். சிறுவர் சிறுமிகளும் அறியுமாறு எளிய நடையில் எழுதப்பட்டிருப்பதன்றி, பெரியோரது மனத்தையும் களிப்பிக்குமாறு, அத்யாத்ம ராமாயணத்திலும், ஆனந்த ராமாயணத்திலும் கண்ட ராமாயணத்தின் உட்பொருளும், அநுபந்தமாக இப்புத்தகத்திற்குச் சேர்க்கப்பட்டுள்ளது. தமிழில் கம்பரெழுதிய கதைக்கும், வடமொழியில் வால்மீகி எழுதிய கதைக்குமுள்ள வேறுபாடுகள் மற்றோர் அநுபந்தமாக அமைக்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் பல பாடசாலைகளில் நான்காவது, ஐந்தாவது வகுப்புகளுக்குப் பாடப்புத்தகமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. யாவராலும் நன்கு மதிக்கப்பட்டது. சின்னாட்குள்ளாக ஐந்தாம் பதிப்பு வெளிவந்திருப்பதே இப்புத்தகத்தின் பெருமையை நன்கு விளக்கும். இப்புத்தகத்திற்கென்றே இதுவலரயும் கண்டிராத புதிய சித்திரப்படங்களுடன் ஒவ்வொரு காண்டமும் விளக்கப்பட்டிருக்கிறது. இப்பதிப்பில் சேர்த்திருக்கும் படங்கள்.—(2) ராமர் பட்டாபிஷேகம், (2) வால்மீகிரிஷி வேடனைச்சபிக்க ராமாயணம் பிறந்தது, (3) ஸீதா கல்யாணம், (4) குஹன், இராமர் முதலியோர்க்கு ஓடம் விடுதல், (5) சபரி இராமருக்குப் பழங்கொடுத்துப் பரமபதம் பெற்றது, (6) இராமரும் ஸுக்ரீவனும் அக்கினிஸாக்ஷியாக ஸ்நேகம் செய்துக்கொள்வது, (7) ஹனுமார் பக்தி பரவசத்தால் கடலைக் கடத்தல், (8) ஹனுமார் பக்தி பரவசத்தால் சீக்கிரத்தில் ஸஞ்சீவி பர்வதம் கொண்டுவருதல், (9) ஸீதை அசுவமேத மஹாமண்டபத்தில் தனது கற்பைநிலைநிறுத்த, பூப்பிரவேசம்செய்தல் முதலியன. இப்படங்கள் மிக அழகாய் அச்சிடப்பட்டிருக்கின்றன. இதிலுள்ளபடங்களிற் சில இதுவரைஎவராலும் பதிப்பிக்கப்பட்டதில்லை. இப்புத்தகத்தின் விலையும் குறைத்தே வைத்திருக்கிறது. விலை ரூபாய் 1. படங்களில்லாமல் விலை அணு 10

---

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், மதராஸ்.

## ஸ்ரீ மஹாபாரத விநவிடை 1-ம் பாகம்

**ஆதி, ஸபா, ஆரண்ய, விராட, உத்தியோக பர்வங்களடங்கியது. (4 - ம் பதிப்பு)**

வேதவியாஸர் எழுதிய இதிஹாஸத்தின் முதலைந்து பர்வங்களின் விஷயங்களை விநவிடை ரூபமாக அமைக்கப் பட்டது. யக்ஷப்பிரச்னம் முதலிய உயர்ந்த விஷயங்களடங்கியது. கதை ஸரளமாக யாவராலும் அறியும்வண்ணம் எழுதப்பட்டுள்ளது. கௌரவ பாண்டவர் யுத்தஸங்காகராகவரும்வரையுள்ள கதை முழுவதும் எழுதப்பட்ட இது பல பாடசாலைகளில் பாடப்புத்தகமாக ஏற்படுத்தப்பட்டுள்ளது. அணு 12.

## ஸ்ரீ மஹாபாரத விநவிடை 2-ம் பாகம்

**பீஷ்ம, துரோண, கர்ண, சல்லிய, ஸௌப்திக, ஸ்திரீ, பர்வங்களடங்கியது.**

இதில் யுத்தத்திற்கு ஆரம்பமானது முதல் யுத்தம் வரையிலுள்ள கதை அடங்கியுள்ளது. முதலில் ஸ்ரீவாஸுதேவர் அர்ஜுனனுக்கு உபதேசித்த கீதாசாஸ்திரம் விளக்கமாக ஸந்தேகமற எழுதப்பட்டிருக்கிறது. இந்தப்பாகத்துக் கதைகளுள் தமிழ்ப் பாரதத்திற்கும் வடமொழி கிறந்தத்திற்குமுள்ள வேறுபாடுகள் அநுபந்தமாக அமைக்கப்பட்டிருக்கிறது. மிகவும் அழகிய படத்துடன். விலை அணு 12.

## ஸ்ரீ மஹாபாரத விநவிடை - ம் பாகம்

சாந்தி, அனுசாஸன, அச்வமேத, ஆச்ரமவாஸிக, மௌஸல மஹாப்ரஸ்தான, ஸ்வர்க்காரோஹண பர்வங்களடங்கியுள்ளன. இராஜ தர்மம், ஆபத்தர்மம், மோக்ஷ தர்மம் என்னும் மூவகைத்தர்மங்கள் விளக்கிக்கூறப்பட்டுள்ளன. ஸ்ரீ கிருஷ்ணபகவானுல் அர்ஜுனனுக்குக்கூறப்பட்டதும் பகவத்கீதையின் சாரமாயுள்ளதும் 16 அத்தியாயங்களையுடையதும் இரண்டுபிராமணர் ஸம்வாதம், பிராமண ஸ்திரீபுருஷ ஸம்வாதம், குருசிஷ்ய ஸம்வாதம், என்னும் மூன்று ஸம்வாதமாக உள்ளதுமான அனுகீதையை அனைவருமறிய இனிய நடையில் எழுதப்பட்டுள்ளது. நூற்கருத்துகளும் உள்ளுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. விலை அணு 12.

---

## AN ADAPTATION OF SHAKESPEARE'S "TAMING OF THE SHREW"

## நீலி வசீகரம்

இது ஆங்கில கவி சக்கரவர்த்தியாகிய மஹாகவி, ஷேக்ஸ்பியர் என்னும் நாடகக் கர்த்தாவினால் இயற்றப்பட்ட டேமிங் ஆப் தி ஷ்ரு (Taming of the Shrew) என்னும் நாடகத்தின் தமிழ் அமைப்பு. படுசீலியாய் யாவருக்கும் அடங்காப்பிடாரியாய், மணப்பவன் மனதை வெறுக்கக்கூடிய குணம் வாய்ந்தவள், நாளடைவில் மணந்தவனது நடத்தும் விதத்தினால் கொடுமை மாறி, கூச்சம் அரும்பி, வணக்கமலர்ந்து, கற்புத்தேன் ஒழுகும் பெண்கள் நாயகமாக வேற்றுமையடைந்த சரிதையைக் கூறுவது. இதில் பதிவிரதையின் மஹிமை, பெண்களது நடத்தை முதலிய பொதிந்து கிடப்பதன்றி, சாதுரியமும் கற்பனையும் பதிந்த பாகங்கள் நிரம்பிக் கிடக்கின்றன. கவி சக்கரவர்த்தியின் அர்த்தம் நழுவாது தமிழ்ப்பிக்கப்பட்ட இப்புத்தகத்தைப் படியாதவர் தமிழின் இன்பம் பெறாதவர் என்றே உறுதியாகக் கூறலாம். எல்லாரும் படிக்கவேண்டிய புத்தகம். விலை அணா 8.

## DRAUPADI

## திரௌபதி அல்லது மனத்திணிலை

இது திரௌபதியின் சரித்திரம். ஸ்ரீ வேதவியாஸ பகவான் எழுதிய வடமொழி பாரதத்தின்வழியாக எழுதப்பெற்றது. பிறப்படைந்த காதை, மீன் பொறி எய்த காதை, ஐவரை யடைந்தகாதை, அவை நடுவுற்ற காதை, உபதேசம் செய்தகாதை, அகந்தை யடங்குங் காதை, பழம் பொருந்து காதை, மனனிலை நின்ற காதை, கீழ்மை யொழிந்த காதை, முடிவடைந்த காதை, என்னும் பத்து அதிகாரங்கள் அடங்கியது. ஸ்ரீ வியாஸ பாரதத்திற்கும் தமிழ் பாரதத்திற்கும் உள்ள வேறுபாடுகள் அங்கங்குக் கீழ்க் குறிக்கப்பட்டிருக்கிறது. இது தவிர இரண்டு அநுபந்தங்கள் உள்ளன. அதனுள் ஒன்றில் திரௌபதி ஒருவளே ஐவரை மணந்தது

---

நியாயமா என்பதைப்பற்றி மார்க்கண்டேயபுராணத்திலிருந்து எடுத்தெழுதப் பெற்றுள்ளது. மற்றொன்றில் திரௌபதியின் உட்பொருள் ரகஸ்யார்த்தங்கள் எழுதப்பெற்றுள்ளது. இப் புத்தகத்துள் பக்தியின் ஒழுங்கு, மனத்தின் சலனம், சலித்து வழிபடல், வழிபட்டு நிலையில் நிற்றலாகிய மனோ பாவங்களின் விஷயம் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. விலை அணு 8.

## ஸ்ரீமத் பாகவத வினாவிடை 1-ம் பாகம்

### முதல் ஒன்பது ஸ்கந்தங்களின் கதை அடங்கியது

கபிலவாஸுதேவர், த்ருவர், ப்ராசீன பர்ஹிஸ், ரிஷப யோகி, ஜடபரதர், அஜாமிளன் முதலிய மஹான்களின் சரிதையும், ஸ்ருஷ்டி விஷயம், வருணாசிரம தருமம் முதலிய விஷயங்களும், தக்ஷயாகம், கஜேந்திரமோக்ஷம் முதலிய உபாக்யானங்களும் அமைந்திருப்பதன்றி, மஹாப்பிரளயம், சாஸ்திர சிருஷ்டிக் கிரமம், சாஸ்திர புராண சிருஷ்டிகளின் பொருத்தம், திரிமூர்த்திகளின் ஸமரஸம், நெடுங்கால அளவை ஆகிய இவைகளைப்பற்றிய வியாஸங்களை அநுபந்தமாக உடையது. பரசுராமாவதாரம் வரையுள்ள கதை பொருந்தியுள்ளது. பத்து உயர்ந்த சித்திரப்படங்கள் ஸ்கந்தத்திற்கேற்ற வண்ணமடங்கியது. படங்களின் விபரம்.—(1) கிருஷ்ண பரமாத்மா வேணுகானம், (2) சுகரம்பா, (3) க்ஷீராப்தி நாதர், (4) வராஹாவதாரம், (5) பகவான் துருவருக்குப் பிரத்யக்ஷமாதல், (6) மத்ஸ்யாவதாரம், (7) கூர்மாவதாரம், (8) நரஸிம்மாவதாரம், (9) வாமனாவதாரம், (11) பரசுராமாவதாரம். படங்கள் மிக அழகாய் அச்சிடப்பட்டிருக்கின்றன. விலை ரூ. 1.

## ஸ்ரீமத் பாகவத வினாவிடை 2-ம் பாகம்

பத்து, பதினொன்று, பன்னிரண்டாம் ஸ்கந்தங்களின் கதை அடங்கியது. இதில் ஸ்ரீகிருஷ்ணபகவான் பிறப்பும் வளர்ப்பும், அவர் லீலைகளும் மிகவும் அழகாய் வர்ணித்திருக்கிறது. இப்பாகத்திலும் அநேக சித்திரப்படங்கள் அழகாய் அச்சிட்டு சேர்க்கப்பட்டிருக்கின்றன.

விலை ரூபா 1.

---

## நளோபாக்யானம்

இஃது ஸ்ரீமஹாபாரதத்திலிருந்து நேராக மிகவும் எளிய நடையில் பண்டித நடேச சாஸ்திரி, பி. ஏ., அவர்களால் தமிழில், மொழிபெயர்க்கப்பட்டது. நளன், தமயந்தி இவர்கள் திவ்யகதையை ஒவ்வொருவரும் அவசியம் படித்தல் வேண்டும். அநேகம் சிறந்த நீதிகள் அடங்கியுள்ளன. மேலும் இதற்கென்றே ஆர்ட் பேபரில் தயாரித்த நான்கு அழகிய படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விலை அணு 12.

## சந்திரசேகரன்

இது ஆனந்தமடம் என்ற தேசபக்தி புகட்டும் நாவலின் ஆசிரியராகிய ஸ்ரீபங்கிம்சந்திர சட்டோபாத்தியாயரால் பங்காளி பாஷையில் இயற்றப்பட்டு அந்தப் பங்காளிபாஷையிலிருந்தே நேராக தமிழில் மஹேசகுமார சர்மாவால் மொழிபெயர்க்கப்பட்டது. இதன் மூலத்தின் சொன்னயம் பொருணயமெல்லாம் சிறிதேனும் குன்றாமல், கற்பின் பெருமையையும், வைராக்யச்சிறப்பையும் தன்மறுப்பின் மாட்சியையும் விசேஷமாய் விளக்கிய அற்புதக்கதை, அழகாய் வர்ணிக்கப்பட்டது. கற்புநிலையினின்றும் தவறுவதற்குச் சிறிது முயன்ற சைவலினி என்னும் பெண்ணுக்குத் தனது பர்த்தா யோகசக்தியால் அருளிய வசீகரநித்திரையின்பிரபாவத்தால் அவள் துர்க்குணம் மாறி கிருதார்த்தமான வைபவத்தை இந்நூலைப்படித்தே அறியவேண்டும். விலை அணு 8.

## ராஜம் ஐயர் சரிதை

இது கமலாம்பாள் சரித்திரம் என்னும் அற்புதக்கதையின் நூலாசிரியரும் பிரபுத்தபாரதம் என்ற மாதாந்தப் பத்திரிகையை மிகுந்த சிறப்புடன் நடத்தி ஆங்கிலம் உணரும் திறனுடையவர்களுக்கு நமது வேதாந்த உண்மைகளை எளிய நடையில் ஸுலபமாகத் தெரிவித்தவரும் ஆகிய ஸ்ரீமான் பீ. ஆர். ராஜம் அய்யர் பி. ஏ., அவர்கள் சரித்திரம். இதனுடன் இவர் செய்த நூல்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ள உபதேச மொழிகளும், இவர் முதலில் ஆங்கிலத்தில் எழுதிய வேதாந்த வியாஸமும் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை அணு 8.

---

## பிரபாவதி

இது வங்காளிபாஷையில் கனந்தங்கிய நரேந்திரநாத சட்டர்ஜி அவர்கள் இயற்றிய நவீனத்தின் தமிழ்மொழிபெயர்ப்பு. கஷ்டம் கூலிதரும், முயற்சி திருவினையாக்கும் நெடுங்காலங் கடந்தபின் நடக்கும் மணத்தினால் வரும் ஸுகம் முதலியவைகளைப் பற்றிய இனிய செந்தமிழ் நவீனம். ஸரளமாக எவரையும் எடுத்தபின் கீழ்வைக்க முடியாமல் படிக்கும்படி செய்யும் திறமையுள்ளது. ஸ்ரீசைல தாதாசாரியாரால் இயற்றப்பட்டது. இரண்டாம் பதிப்பு. விலை அணா-4.

## இயற்கை அற்புதங்கள்

மயிலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல் முதல் உதவிபோதகரான ஆ. ஸீ கஸ்தூரிரங்கய்யர், பி. ஏ., எல். டி., அவர்கள் செய்தது. ரிடையர்டு ஸ்கூல் இன்ஸ்பெக்டர் ம-ள-ள-ஸ்ரீ, ராவ்பஹதூர் L. C. வில்லியம்ஸ் பிள்ளை, B. A., அவர்கள் எழுதிய சிறந்த முகவுரையுடன் கூடியது. விலை அணா 8.

இப்புத்தகத்தில் அநேக சித்திரப்படங்கள் ஆங்காங்கு அழகாய் அச்சிட்டுச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மிகவும் சேர்த்தியாய் பைண்டு செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு எலிமெண்டரி உபாத்தியாயருக்கும், புஸ்தகசாலைக்கும் மிக அவசியமானது. யாவராலும் சிலாகிக்கப் பெற்றது.

### இதிலடங்கிய விஷயங்கள்

(1) மழைக்கால்கள் (2) எரிமலைகள் (3) பூகம்பம் (4) வெந்நீர் ஊற்றுகள் (5) கானல்நீரும் அதன் ரூபாந்தரங்களும் (6) வால் நக்ஷத்திரங்கள் (7) எரிநக்ஷத்திரங்களும் பொறி நக்ஷத்திரங்களும் (8) வானவில் (9) நிழலும் கிரகணங்களும் (10) ஹாலிவால் நக்ஷத்திரம் (11) மொழிபெயர்ப்பு விளக்கம்.

---

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், மதராஸ்.